உ
சிவமயம்.

தந்திவிலாசம்—"Oolian" Regd No. M. 1509. "Dhana Vysia O[illegible]"

# தனவைசிய ஊழியன்

வெள்ளி தோறும் வெளிவரும்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௧. காரைக்குடி துன்மதிஸு ஆனிமீ ௧௰ (௨௪—ஜூ—௧௯௨௧) இதழ் [illegible]

## நமக்கு வேண்டியது விஷயமே.

சகோதரர்களே!

கோவிலூரில் ஆனிமீ ௩௧௨ கூட இருக்கும் மகா நாட்டின் நடவடிக்கைகளை எந்த முறையில் நடத்துவதென்ல[illegible] இப்பொழுது பலரி[illegible] ஓடிக்கொண்டிருக்கிறது. [illegible]துபற்றிப் பலர் பலவிதமாகப் பேசுகின்றனர். சில நண்பர்கள் நமது ஊழியன்மூலமாக எழுதி தங்கள் அபிப்பிராயத்தையும் தெரிவித்திருக்கின்றனர். இந்த விஷயத்தை மிகநன்றாக யோசித்துக்காரியத்தை முடித்து நிலை பெற்று நிற்க வேண்டியதற்கான முயற்சி என்னவோ அதை ஒவ்வொருவரும் செய்யவேண்டியதவசியமே.

முதலாவது மகா நாட்டிற்குப்பிரதிநிதி தேர்ந்தெடுத்தனுப்ப வேண்டிய விஷயத்தை யோசிப்போம். கூட்டத்திற்கு விஜயம்செய்பவர்களெல்லாரும் விஷயங்களைப் பேசி முடிவு செய்வதென்றால் சிறிதும் சாத்தியமில்லாத விஷயம். தீர்மானம் செய்தபின் உறுதியாக நிலைபெற வேண்டியதை உத்தேசித்து ஒவ்வொரு ஊர் நகரத்தார்களும் விரும்புகிறபடி—சௌகரியப்படி—அந்த ஊரில் கரையாகவோ—வகையாகவோ— பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனுப்புதல் வேண்டும். அவர்கள் செய்து கொண்டு வரும் தீர்மானத்திற்கு அவ்வூரார் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். எல்லாரும் வந்து மகாநாட்டில் பேசினால் மேலே [illegible]ண்ட விஷயத்திற்கு முரண்படும். பிரதிநிதி தேர்ந்தெடுத்தனுப்பவேண்டிய விஷயத்தைப் பற்றி நான் அதிகமாகக் கூட ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. ஏனென்றால் இவ்விதமான பொறுப்புள்ள பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனுப்பினால்தான் காரியசித்தியடையலாமென்று அறிவாளிகள் பலர் எண்ணி அநேகம் ஊர்களில் பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்துவிட்டார்கள். மற்ற ஊர்களிலும் பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்து விடுவார்களென்பதிலும் கூட்டத்தைக் கண்டு ஆனந்தித்துச் செல்ல ஏராளமான சகோதரர்கள் அங்கு விஜயம் செய்வார்கள் என்பதிலும் சந்தேகமில்லை.

இனிக் கூட்ட நடவடிக்கைகளை அக்கிராஸனர் முறையாக நடத்துவதா? அல்லது இருந்து கொண்டு விஷயங்களைப்பேசுவதா என்ற விஷயம் பலருடைய மனதையும் கவர்ந்துகொண்டு நிற்கின்றன. அக்கிராஸனர் வைத்துப் பேசுவது புதுமுறை-தற்கால நாகரீக முறை-என்று சிலர் சொல்கின்றனர். கூட்டத்தில் பேசப்படுகிற விஷயம் அனைவர்க்கும் தெரியவேண்டும். ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருக்கும் கூட்டத்தில் ஏககாலத்தில் பலர் பேசுகிறதினாலே ஒன்றும் தெரியாமல்ப் போய்விடுகிறது. ஊர்க்கூட்டம் ஒன்று நடைபெறுகிறபோதுகூட மிகுந்த சப்தம் உண்டாகி சிரமம் ஏற்படுகிறதை நாம் நேரே காண்கின்றோமல்லவா? அமைதியாக விஷயத்தை மாத்திரம் எடுத்துச் சொன்னால் பலரும் நன்றாக உணர்வார்கள். நடந்த ஆலோசனைக் கூட்டத்தில் முதலில் பேசினது பலருக்கு ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. பின்னர், சிலர் எழுந்து சொன்ன பிறகுதான் விஷயம் தெரியவந்தது என்பதைப் பலர் அறிவர். இத்தகைய காரணங்கொண்டு தான் அக்கிராஸனர் முறை வேண்டுமென்று அநேகர் விரும்புகின்றனர். பிரதிநிதியாக வருபவர்கள் அபிப்பிராயம் எப்படியோ? புதுமாதிரி என்பதற்காக மட்டும் கூடாதென்று சொல்லப்படாது. எப்படி நடத்தினால் காரியம் சித்தியடையுமோ அப்படி, நடத்தவேண்டுவதுதான் முறை. எம்மாதிரி நடந்தாலும் நமக்குக் காரியந்தானே குறி! இப்பொழுது என்னுடைய அபிப்பிராயத்தை தெரிவித்தேன். ஆனால், அதன்படிதான் கூட்டத்தின் நடைமுறைகள் நடக்க வேண்டுமென்பதல்ல. மற்றும் பிரதிநிதிகளாக அங்கு வருகிறவர்கள் எப்படி அபிப்பிராயப்படுகிறார்களோ, அதன்படி நடவடிக்கைகளை நடத்தி காரியங்களை முடிவுசெய்ய வேண்டுவதுதான் முக்கியமாகும்.

பிச. சுப்பிரமணியன்,
அமராவதிபுதூர்.

---

## ஒரு கேள்வி.

தனவைசிய சிகாமணிகளே!

நம்மரபினர்கடைகளில் கொண்டு விலை செய்பவர்களுக்குக் கணக்கு முடிந்தபின் சாமானுக்காகக் கொடுக்கும் தொகையை மறுபடியும் முன் புறப்பட்ட முதலாளிகளுக்கேயன்றி மற்றையோருக்குப் புறப்பட்டால் சாமானுக்குக் கொடுத்ததை வட்டி சகிதம் வாங்கிக் கொள்கின்றார்களே! அது மூன்று வருடமிருந்து உழைத்ததற்கா? பின்னும் அவர்களுக்கே புறப்பட்டு வருவதற்கு அட்வான்ஸா?

இதற்கு சந்தாநேயர்களாவது மற்றும் பெரியோராவது தனவைசிய ஊழியசங்கத்தாராவது விடையளிக்கக்கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஓர் தனவைசியன்.

## ஈப்போ.

### நன்மதிஜெ வைகாசிமீ சதிவு

வைகாசிமீ அஉ நடைபெற்ற விசாக உற்சவத்திற்கு ஏராளமான ஜனங்கள் விஜயஞ்செய்திருந்தனர். கஉ காலை கூ-மணி முதல் முருகபிரான் சன்னதியில் ஸ்ரீமாக் சா. லெ. செட்டியப்ப செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் ஒரு சபை கூடியது. பல அன்டர்கள் உபக்யசித்தனர். கஉ காலை கO-மணிமுதல் க-மணி வரை பழ. மு. நா. கிட்டங்கியில் ஸ்ரீமாக் சா. லெ. செட்டியப்பசெட்டியாரவர்களின் அக்கிராசனத்தில் ஒரு ஜாதியக்கூட்டம் கூடியது, பல ஜாதியபிமானிகள் உபந்யசித்தனர். ஸ்ரீமாக் அழ. அருணாசலஞ் செட்டியாரவர்கள் நமது சமூக விஷயமாக நமது தாய் நாட்டில் தனவைசிய ஊழியர் சங்கத்தார் செய்து வரும் அரியவேலைகளைப் பாராட்டி அவர்கள் செய்திருக்கும் தீர்மானங்களையும் ஈப்போவில் கூடியுள்ள பொதுக் கூட்டத்தார் மனமார ஆதரிப்பதோடு அச்சங்கத்தாருக்கும் எங்களது நன்றியறிதலைச் செலுத்துகிறோம் என்ற தீர்மானத்தைப் பிரேரபித்து சங்கம் இதுவரை செய்திருக்கிற வேலைகளைப் பற்றி விரிவாக ஒரு உபந்யாசம் செய்தார்கள் ஸ்ரீமாக் தெ. சொ. ராமநாதன் செட்டியாரவர்கள் ஆமோதித்தார்கள். சபையோரின் பலத்த கரகோஷத்தினிடையே தீர்மானம் நிறைவேறியது. என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

---

### ஸ்ரீமான் சத்தியமூர்த்தி ஐயரவர்களின் கடிதம்.

உள்ளூர் வர்த்தமானம் என்னும் தலையங்கத்தின்கீழ் தங்கள் கO—சு—உக பிரதியில் நான் காரைக்குடியில் செய்த பிரசங்கத்தைப்பற்றி சில குறிப்புகள் எழுதியதை வாசித்தேன். அவைகளில் ஒன்றைப் பற்றி மாத்திரம் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். "இத்தகைய படிப்பும் கௌரவமும் உள்ள ஐயரவர்கள் நாடகம் ஆடலாமா?" என்று கேட்டிருக்கிறது. நம் நாட்டில் ஆண்டவனே நடனமாடுகின்றார். நடராஜன் தியாகராஜன் முதலிய அவதாரங்களில் நடனம் புரிந்தது எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டவிதியை முன்னாளில் அரசர்கள் அரண்மனையில் பெரியோர்கள் நடித்திருக்கிறார்கள் இக்காலில் கவிரவீந்திரநாத்டாகூர் நாடகம் நடித்தது நான் நேரகப்பார்த்தேன். நாடகத்தின் மூலமாக நல்லொழுக்கம் தேசிய உணர்ச்சி பாஷா ஞானம் இவைகளையெல்லாம்பெருக்கலாம். அவ்வாறே நாங்கள் சுகுணவிலாசசபையில் செய்து வருகின்றோம். இதர நாடுகளில் பெரியார்கள் நாடகமாடுகின்றார்கள் தேசிய உணர்ச்சியை எழுப்பக் கூடிய நாடகங்கள் அதற்காகவே இன்னும் எழுதப் படவில்லை.. எழுதினால் சபையார்கள் சரியான நாடகமாயிருந்தால் கட்டாயம்நடிப்பார்கள். சுகுணவிலாச சபையார் காங்கிரஸ் சபைக்கு என்று நோகப் பண உதவி செய்யாவிட்டாலும் தென் ஆப்பிரிக்கா இந்தியருக்கும் பங்களாவில் நடந்த பஞ்சத்திற்கும் கோகலே ஞாபகச்சின்னத்திற்கும் இன்னமும் எவ்வளவோ பொதுவான ராஜீய காரியங்களுக்கும் பண உதவி செய்திருக்கிறார்கள்.

சத்தியமூர்த்தி.

## இராமச்சந்திரபுரம்.

### ப்ரம்ம வித்யா ப்ரசாரணசபை.

கண்டனூர் ஸ்ரீமான் நா. பெ. நா. மு. முத்துராமய்யா அவர்கள் முயற்சியில் சிவன் கோவில் திருவிழா தினங்களாகிய நாளிது ஆனி-மீ க-உ முதல் ச-உ வரை இந்த சபை நடைபெற்றது. முதலிரண்டு நாளும் அம்மன் கோவிலில் புதுக்கோட்டை நாலுகுருஸ்வாமிகள் அக்கிராசனத்தில் கண்டனூர் வித்துவான் லால்குடி சுப்பிரமணிய சாஸ்திரிகளவர்களால் "பக்திப்பிரவாகமும்" காரைக்குடி மோ. வெ. கோவிந்தராஜ அய்யங்காரவர்களால் "கௌசிகர் வேண்டுகோளும்" ஆளுடையார் கோவில் பிர்மஸ்ரீ சுந்தரசாஸ்திரிகளவர்களால் "மணிவாசகர் மாண்பும்" உபந்யசிக்கப் பெற்றன. மற்ற இரண்டு தினங்களில் ஸ்ரீமாக் தீ. சொ. நாகப்ப செட்டியாரவர்களின் கலாசாலை நடு மண்டபத்தில் பூமீஸ்வரஸ்வாமிகளின் தலைமையில் திருப்புவன மடம் கோவிலூர் ஸ்ரீ காசிகாணந்த ஸ்வாமிகளவர்களால் ஆசாரிய ப்ரபாவம் என்னும் விஷயத்தை கால வியல்புக்குத் தக்கபடி வைதிக லௌகிக விஷயங்களுடன் உபந்யசித்தார்கள். ஸ்ரீமாக் மோ. வெ. கோவிந்தராஜய்யங்காரவர்களால் "கௌசிகரின் யாகசம்ரக்ஷணமும், உள்ளூர் பிர்மஸ்ரீ மீனாக்ஷிசுந்தர தீக்ஷிதரவர்களால் நமது கடமையும், காரியதரிசி ஸ்ரீமாக் முத்துராமப்பா அவர்களியற்றிய வேதாந்தக்கும்மி பிரபந்தமும் கப்பல் பாட்டும் கலாசாலை தமிழ்ப்பண்டிதர் பிர்மஸ்ரீ திரு ராமஸ்வாமி ஐயங்காரவர்களாலும் உபந்யசிக்கப்பெற்றன. ஸ்ரீமாக் செ. கி. கிருஷ்ணன் செட்டியாரவர்களால் வரவழைக்கப் பெற்ற திருப்பாதிரிப் புலியூர் தேவார பாடசாலைப்பிள்ளைகளும் உபாத்தியாயரும் தேவாரகானம் செய்தார்கள். வேதாந்தம் ஸ்ரீமான் அழகப்ப செட்டியாரவர்களின் தீவிரமான ஊக்கம் கொண்டாடற்பாலது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

---

### புதுவயல் தனவைசியர்களுக்கு ஓர் விஞ்ஞாபனம்.

சாக்கை ஸ்ரீ வீரசேகர உமையாம்பிகைக்கு நடைபெறுகிற பிர்மோற்சவத்திற்கு தேவஸ்தானத்திலிருந்து செல்லுமான ரூபாய் சாங்ஷன் செய்கிறார்கள். அதோடு ஒவ்வொரு மண்டகப்படிக்காரர்களும் ரூபாய் ௫௦௦, ௬௦௦ வரை செலவு செய்கிறார்கள். இதைவிட மேளம் பியாண்டு சதுர் தேவார பாராயணம் தண்ணீர்ப்பந்தல் முதலியவற்றிற்கு ரூபாய் ௧,௦௦௦ வரை புதுவயலில் நம்மவர்களிடம் வாங்கி வரவு செலவு செய்யப்படுகிறது. ஆனால், இவ்வளவு செலவு செய்து மவர்களின் அதிகாரத்திற்கு ஒன் நடப்பதில்லை. இதையாவது அன் கவனித்து நமது ஊரிலிருக்கிற ஸ்ரீ லாச விநாயகருக்கு, உப்பூரில் ந உத்சவத்தைப்போல ஆவணிமீ வி சதுர்த்தியில் பத்துநாள் உற்சவம் ந ஞல் இம்மையில் சகல விக்னங்களும் மறுமையில் மோக்ஷ சாம்ராஜ்ய யும் அடைய ஏதுவாகும். நமது தார்கள் முயற்சி செய்வார்களென்று பார்க்கிறேன்.

ஓர் தனவைசியன், புதுவ

---

## ஆமோதிப்பு

நண்பர்காள்!

நம் ஜாதீயத் தீர்மானங்களை பார்த்தாலும் விரைவாய் நடந்து வ றன. நம் தாய்மாரும் சகோதரிகளு பெண்களுக்கு வட்டிக்குக் கொடுத் த்தது மாதிரி வந்த வரும்படியும் ஒரு குறைந்து விட்டது. ஆகலால் த தாபாராகிய பெரிய வீட்டார் மகள் களுக்குக் கொடுத்து வந்த போ வாரதும் இனிக் கொடுத்தலும் எ தலும சிறிதும் பொருத்தமல்ல வெ நாம் சொல்லாமலே வ ரும். அ பற்றி நண்பர் வீ. சா. க. விஸ்வ செட்டியாரவர்கள் சில வாரம் மு ஊழியனில் வெளியிட்டிருப்பதை முழுதும் ஆதரிக்கிறேன். சில கு தில சண்டைமே உருவாக உடை மிமாரும் நாத்திமாரும் இதில் அமுல் லுத்த உத்தேசிப்பர். அது ஞாய அவர்களுக்கும் இதனால் நலமுண் பதைப் பெரியோர் எடுத்துக்காட் ண்டும். ஆற்றோடு போனாலும்பா தெப்பக்காரனுக்கு துட்டு கொடுக்க தென எண்ணுவதை விட்டு விட டும். தீர்மானத்தை சிரத்தையுடன் துவதற்கு பொறியும் வாகனும் ஐ யாகக் கொடுக்க வேண்டியது அவ ன்பதை செய்கையில் செய்து காட் வரும்படி வந்தனத்தோடு கேட் ள்ளுகிறேன்.

சு. பழனியப்பா, கடியாப

---

10. 6. 21. ஊழியனில் சு. ப. கந்தசாமி செட்டியார் வெளியிட்ட வைசிய மகாநாடும் வாலிபரும்" வியாசத்தைக் கண்ணுற்றேன். ருதுமதிவிவாகம் செய்ய வேண்டு மூத்தபெண்ணை இளைய மாப்பி விவாகம் செய்யக்கூடா தென்பது ராட்டத்தக்கன. மேல் நாட்டா போல் நம்பெண்கள் ஜென்ன தேச விடுத்துக்கப்பல் பிரயாணம் செய்வ ஆசாரத்திற்கும் மதிப்பிற்கும் ஒவ் ஆனது பற்றிமேற் கூறிய இரண்டு யத்தையும் முடிவுக்குக் கொண்டு வ ஞல் நம்நாடு நன்மை யடையுமெ லையமில்லை. என்று ஸ்ரீமாக் ராம. விஸ்வநாதன் செட்டியார் எழுதுகி



## நமது மகாநாடு.

(௪)

இரண்டாவது தீர்மானிக்க வேண்டிய விஷயம் ஸ்ரீதனம் கொடுத்தல். ஸ்ரீதனம்கொடுத்தல் என்பதுஎன்ன? பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொடுக்கும் பொழுது தம்முடைய பொருளுக்கேற்ப தம் பெண்ணுக்கு தாம் விரும்பிய பொருளைக்கொடுத்தல். ஸ்ரீதனத்திற்கு இதைத்தவிர வேறு அர்த்தமே கிடையாது. இது நம்முடைய சமூகத்தில் மாத்திரம் அல்ல. இந்தியாவில் அநேகமாக எல்லாச் சமூகங்களினும் நடந்துவருகிறது. நம்நாட்டை ஆண்ட ராஜாக்களெல்லாம் கணக்கற்ற பொருளைத் தங்கள் பெண்கட்குக் கல்யாணகாலத்தில் ஸ்ரீதனமாகக் கொடுத்திருக்கிறார்களென்பதைப் புராதன சரித்திரங்கள் வாயிலாக அறிகிறோம். மற்ற சமூகங்களினும் தங்கள் தங்கள் பணத்திற்கேற்ப, இன்றைக்கும் ஏராளமான பொருளைப் பெண் மக்கட்கு ஸ்ரீதனமாக அளித்து வருகிறார்கள். இதில் மற்ற சமூகங்கட்கும் நமது சமூகத்திற்கும் என்ன வித்தியாச மென்றால், மற்ற சமூகத்தில் தங்கள் தங்கள் பணத்திற்கேற்பக் கொடுப்பார்கள். நமது சமூகத்தில் அது கிடையாது. மற்ற சமூகத்தில் ஐந்து லட்சம் பணம் வைத்திருக்கின்ற ஒருவருக்கு ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் இருக்குமானால், இரண்டும் தாமபெற்ற குழந்தைதானே என்று எண்ணி, நம்முடைய இந்தியச் சட்டப்படி பெண் குழந்தைக்குப் பாகம் கிடையாது ஆனபடியினாலே பெண் குழந்தைக்கு ஒரு லட்சம் கொடுப்பவர்கூட உண்டு. பாக்கி நான்கு லட்சம் ஒரு ஆண் குழந்தைக்குப் போதாதா என்று அவர் எண்ணுகிறார். அதற்காக அந்த சமூகத்திலே பிறந்து அதிகப் பணமில்லாதிருக்கின்ற மற்றொருவர் அவர் கொடுத்த தோதுப்படி கொடுக்க வேண்டுமென்று எண்ணி தம் பணத்தையும் கொடுத்துப் போதாதிற்குக் கடன் வாங்கியாவது கொடுக்கவேண்டுமென்று எண்ணமாட்டார். ஒரே சமூகத்தில் லட்சம் கொடுத்தவர் ஒருவரிருப்பார். அதனினுங் குறையக் கொடுத்தவரும் ஒருவரிருப்பார். நூறு கொடுத்தவரொருவரிருப்பார். ஸ்ரீதனம் கொடுத்தல் தங்கட்குள்ள பணத்தைப் பொறுத்து இருத்தல் வேண்டும். அதுதான் நியாயம். பணத்தைப் பொறுத்துத் தாம்பெற்ற பெண்ணுக்கு ஸ்ரீதனம் அதிமாகக் கொடுத்தல் குற்றமென்று கூறமுடியாது. எவ்வளவு கொடுத்தாலும் பணம் அதிகமாக வைத்திருப்பவர்கள், வீண் செலவு செய்தல் சீர்முறையில் அநாவசியமாகப் பலசாமான்கட்குப்பணத்தைக் கொட்டுதல் முதலியவற்றையெல்லாம் பணமதிகமாகவைத்திருப்பதற்காகச் செய்யப்படாது என்று தைரியமாக நாம் கூறலாம். அது போன்றதல்ல ஸ்ரீதனம் கொடுத்தல். இந்த விஷயம் நம்முடைய சமூகத்தில் எப்படிக் கையாளப்பட்டு வருகிறது? தங்கள் தங்கள் பணத்திற்கேற்ப ஸ்ரீதனம் கொடுத்தல் என்ற முறை கிடையவே கிடையாது. அதிகப்பணமுள்ள ஒருவர் கொடுப்பதுபோல சொற்ப பணமுள்ள ஒருவரும் கொடுக்கின்றார். பெரிய பணக்காரர் வீட்டில் கல்யாணஞ் செய்து கொடுத்துவிட வேண்டுமென்பதற்காகக் கடன்வாங்கியும்கூட ஸ்ரீதனம் கொடுக்கின்றார்கள். கையிலுள்ள பொருள்களை எல்லாம் ஒரு பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொடுக்கும் பொருட்டு ஸ்ரீதனத்திலும் சீர்முறையிலும் வீண் செலவிலும் போட்டுவிட்டுப் பிறகு ஜீவனத்திற்குக்கூட சம்பாதிப்பம் செய்கின்றவர்களையும் நம்முடைய சமூகத்திற் காண்கின்றோம். மற்றும், இதில் ஒரு விஷயமிருக்கின்றது. மாப்பிள்ளை வீட்டுக்காரர் இவ்வளவு ரூபாய் ஸ்ரீதனமும் இவ்வளவு சீர்முறையும் தந்தாலதான் பெண்ணைக் கல்யாணஞ் செய்துகொள்ளுவோம் என்பது. இது எவ்வளவு தூரம் நாகரீகம் என்பதை நான் கூறவேண்டுவதில்லை. மணமகனுக்கும் மணமகளுக்கும் விவாக காலத்தில் நம்முடைய நூல்கள்விதித்தபடி பார்க்க வேண்டிய பொருத்தங்களைப்பற்றிக் கூட அநேகருக்குக் கவலைகிடையாது. ஸ்ரீதனம் முதலியவற்றைத்தான் முக்கியமாகக்கவனிப்பது. சகலமும் பொருந்தி விவாகம் நிச்சயித்துக் கொள்ளும் பொழுது ஸ்ரீதனம் கொடுத்து வாங்கிக் கொள்ளுகின்ற ஓரே காரணத்தினால் விடுபட்ட கல்யாணங்கள் பல உண்டு. நம்முடைய சமூகத்திலே பணக்காரர் வீட்டிலுங் கூட, மற்ற பொருத்தங்கள் இல்லா விட்டாலும் ஸ்ரீதனம் அதிகமாகத் தருபவர் வீட்டில்தான் மாப்பிள்ளை வீட்டார் சம்மதிக்கின்றனர். ஆகவே விவாக விஷயமாக சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட சகலமும் ஸ்ரீதனத்தில் அடங்கிவிடுகின்றன. மாப்பிள்ளை வீட்டார் ஸ்ரீதனம் கேட்டல் என்ற விஷயத்தை அறவே விடுத்து பெண் கொள்ளுகின்ற விஷயத்தில் கவனிக்கப்படவேண்டிய வேறு காரியங்களைக் கவனித்தல்தான் முறை. அங்ஙனம் செய்ய யாவரும் முன்வந்த அன்றுதான் சமூகம் முன்னேற்ற மடையும். இதை ஒவ்வொருவரும் செய்கையிற் காட்டவேண்டுமேயன்றி "மாப்பிள்ளை வீட்டார் ஸ்ரீதனம் கேட்பதில்லை" என்று மகாநாட்டில் ஒரு தீர்மானஞ் செய்யமுடியாது. தங்கள் தங்கள் மக்களின் பிற்கால வாழ்க்கைக்காக அவரவரும் நடந்துகொள்ளல் வேண்டும்.

இனி, பெண் வீட்டாரும் பணம் முதலியவற்றையே குறிக்கொண்டு தமது சக்திக்கு அதிகமாக ஸ்ரீதனம் கொடுத்து இடர்ப்படாது விவாக காலத்தில் மற்ற விஷயங்களைக் கவனித்தல் வேண்டும். இப்பொழுது இந்த விஷயத்தை அதாவது "ஸ்ரீதனம் கொடுக்கின்ற விஷயத்தைமகாநாட்டில் பேசி எல்லாருக்கும் சௌகரியமாக இருக்கும்படியாக இவ்வளவுதான் கொடுப்பது என்று வரையறுத்துத் தீர்மானஞ் செய்தல் வேண்டும்" என்று ஆலோசனைக் கூட்டத்தில் தீர்மானித்திருக்கிறார்கள். நியாயமாக நாம் பார்க்கும் பொழுது இந்த விஷயம் தீர்மானிக்கப்பட வேண்டிய ஆவசியகம் இல்லை. ஸ்ரீதனம் எவ்வளவு கொடுத்தாலும் அது சாஸ்திர விரோதமாக மாட்டாது. பணமுள்ளவர் கொடுக்கலாம். பணமில்லாதவர் பணக்காரரோடு போட்டிபோட்டுக் கொண்டு கொடுத்தல்தான் தவறு. அதிகப்பணமில்லாதவர் தம் சக்திக்கு அதிகமாகக் கொடுப்பதைத்தடுப்பதுதான் முறை. ஆனால், மகாநாட்டில் இதைப்பற்றி ஏன் தீர்மானஞ் செய்திருக்கின்றார்கள்? என்றால் நம்முடைய சமூகத்தின் புராதன முறையை உத்தேசிக்கும்பொழுது இந்தத் தீர்மானம் மிக மிக இன்றியமையாததாகும். மற்ற சமூகங்களைபோல கட்டு இல்லாது அவரவர் நோக்கம்போல வாழ்ந்து வந்த சமூகமல்ல நமது சமூகம். எந்தககாரியத்தைச் செய்தாலும் ஏழை பணக்காரர் என்ற வித்தியாசமேயில்லாது ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வரையறைப்படுத்தி சேர்க்கையாக நீண்டதூரமில்லாத ஒரே இடத்தில் ஒரேபடியாக வாழ்ந்துவந்த சமூகம் நம்முடைய சமூகம் என்பதை பண்டைக்காலந்தொட்டு இன்றும் வழங்கமாக நாம் எழுதிவருகிற இசைகுடிமானம் ஒன்றினாலேயே அறியலாம். நமது பெருமைக்கேற்ப நமது முன்னோர்கள் எப்படிக் கொஞ்சப் பணக்காரருக்கு இணங்கியே அதிகப்பணக்காரரும் நடந்துகொண்டார்களோ அதுபோலவே சமூகத்திலுள்ள மற்றவர்களின் நன்மையின் பொருட்டாகச் சிறிதுவிட்டுக் கொடுத்து ஸ்ரீதனத்தை மிகக்குறைவாக ஒருவரையறை செய்து மகாநாட்டில் தீர்மானித்தல் வேண்டும். பணக்காரர்களெல்லாரும் தங்கள்பெண்கட்குக் கொடுக்க வேண்டுமானாலும் சாதாரண காலங்களில் எவ்வளவு வேண்டுமானாலும் கொடுக்கலாம். கடைகளை வேண்டுமானாலும் பேர்மாற்றி விடலாம். அதற்கு ஒருவரும் போட்டி போடமாட்டார்கள். இந்த விஷயத்தை மற்றவர்களைக் காட்டிலும் அதிகப் பணக்காரர்கள் மிகுந்த உற்சாகத்தோடு தீர்மானஞ்செய்து தங்கள் முன்னோர்களுடைய புராதனப்பெருமையை அடைவார்களென்று நிச்சயமாக நம்புகிறேன்.

ராய. சொக்கலிங்கம்.

காரைக்குடி.

## மதிப்புரை.

---

சகோதரி வி. பாலம்மாள் இயற்றிய நூல்கள்.

திலகவதி:—இந்நூல் சொல்நயம் பொருள் நயம் அமையப்பெற்றுப் படிப்போர் மனதில் உண்மையான தேசபக்தியை ஊட்டுகின்றது: தற்கால நாகரிகவளர்ச்சிக்கு ஏற்றவாறு ஆசார சீர்திருத்தத்தைச் சொல்லி வருகிறது. காலமாறுதல்களையும் வெகு தெளிவாய் எடுத்துக்காட்டி நிற்கிறது. அரசியல் துறையில் அறியவேண்டிய அவசிய விஷயங்களையும் அடிக்கடிவலியுறுத்துகிறது. ஸ்திரீ தர்மத்தையும் தற்கால நாகரீகத்துக்கு ஏற்றவாறு சொல்லிப் போகிறது. ஆனல், பேடல் மசோதாவை உறுதிப்படுத்திப் போகிறதாயினும் அது முழு ஜன ஸம்மதியைப் பெறவேண்டும். இவை நிற்க, தற்காலம் நடந்தேறிய ஐரோப்பிய மகாயுத்தத்தையும் ஆங்கிலர் அடைந்த வெற்றியையுங்கூட விவரமாகக் கூறிச் செல்கிறது. கதைத் தொடர்பானது எடுத்தவர் படித்து முடிக்கும்வரை வேறொன்றில் கவனம் செலுத்ாதபடி அமைந்திருக்கிறது. இதனை யியற்றியோருக்குத் தமிழ் ஸம்ஸ்க்ருதம் கன்னடம் முதலிய பாஷைகளில் பாண்டித்யம் உண்டு. ஆகையால், அவருடைய உண்மைப் புலமையை உறுதிப்படுத்துகின்றது. இதனை தமிழ்மக்கள்யாவரும் படிக்க வேண்டியது அவசியத்திலும் அவசியம். இது சென்னை சர்வகலாசாலை போதகாசிரியர் ராவ்ஸாகிப் ஸ்ரீமான் எஸ். கிருஷ்ணஸாமி ஐயங்கார் எம். ஏ. அவர்களது முன்னுரையுடன் கூடியது. இதன்விலை ரூ. க—அ—0

உண்மைக்காதல் அல்லது ஒற்றுமையின் வெற்றி:—குடும்ப வாழ்க்கையில் ஒவ்வொருவருக்கும் சம்பவிக்கக்கூடிய கஷ்ட நஷ்டங்களை நன்கு விளக்கிக் காட்டித் தற்கால ஆசார சீர்திருத்தம் தேசபக்தி முதலியவற்றை யுண்டுபண்ணி இந்திய ஜன ஒற்றுமையைப் பலப்படுத்துகினறது. இதன் விலை அணு ரு.

தேவதத்தன் அல்லது தேசசேவை: இது தேசநிலையையும் தொழிலாளர் இயக்கத்தையும் உள்ளபடி எடுத்துக் காட்டி தேசாபிமானத்தையும் தொழிலாளரிடத்தில் அன்பையும் எழுப்பித் துன்பம் இரக்கமில்லாமை பாமரத்தன்மை வேசியர்கள் மோசம் முதலிய பல துர்க்குணங்களைக் கண்டித்துப் படிப்போர் மனத்தில் உறுதி பயக்கும் உண்மைகளை நன்கு நாட்டுகின்றது. தமிழர்கட்குப் பிரயோஜனமான நூலாகும். இதன் விலை அணு 5.

இந்தியக் கைத்தொழிற் சிறப்பு:—இது இந்தியக் கைத்தொழில் விசாரணைச் சங்கத்தின் அறிக்கையில் பண்டித மதன்மோகன மாளவியா அவர்கள் எழுதின புஸ்தகத்தின் மொழிபெயர்ப்பு. ராவ் பகதூர் டி. ரெங்காச்சாரி பி.எ. பி.எல். அவர்கள் எழுதிய முன்னுரையுடன் கூடியது. இந்த மொழிபெயர்ப்பானது கனம் மாளவியா அவர்களது கருத்தை நன்கு காட்டி தமிழபிமானிகளுக்கு தொழில்நிலைமையைப் பற்றி நன்முய் விளக்கிக்காட்டுகிறது. எளியநடையில் எழுதப் பட்டிருக்கிகிறது. இதன் விலை ரூ. ஒன்று; இத்தகைய நூல் எழுதி வெளியிட்டமைக்கு சகோதரி வி. பாலம்மாளுக்கு நாம் மிகவும் நன்றி பாராட்டுகிறேம்.

இப்புத்தகங்கள் வேண்டுவோர் ஸ்ரீமதி வி. பாலம்மாள் அவர்கள் விவேகாச்ரமம் 39 பீடர்ஸ் ரோட் ராயப்பேட்டை சென்னை என்ற விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

பக்தி விளக்கம்:—இதனை யியற்றியவர் கும்பகோணம் ஸ்ரீமான் ஸி. எஸ். ராதாகிருஷ்ணயர் அவர்கள். இதில் பக்திஎன்னும் அருமைமுறையை நன்கு விளக்கமாக எடுத்துக் காட்டி ஈச்வரனது அவதார விசேஷம் மூர்த்தி மகிமை பக்தர்கள் பெருமை ஆசாரியர்களின் அவசிய குணம் மாணவர்களின் மனநிலை முதலியவற்றைப் படிப்படியாய்ப் போதிக்கின்றது; அருமையான தமிழில் எழுதப் பெற்றிருக்கிறது. எளிய நடையிலும் அமைந்திருக்கிறது. காலஞ்சென்ற நாவலிஸ்ட் நாகை ஸி. கோபால கிருஷ்ணன் அவர்களால் எழுதப்பெற்ற சிறப்புரையுடன்கூடியிருக்கிறது. இதன்விலை அணு கஉ. வேண்டுவோர், கும்பகோணம் மங்கள விலாசம் புக்டெபோ ஸ்ரீமான் ஸி. எஸ். ராதாகிருஷ்ணயர் அவர்கள் என்று எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

மகாத்மா காந்தி:—இத்த... புத்தகமொன்று நமது பார்வை... இன்று கிடைத்த... இதனையியற்றியவர் ஸ்ரீமாந் கிரு... சாமி சர்மா அவர்கள். உ0அ ப... கள் கொண்ட அரிய புத்த... இதன் விலை ஒன்றரை ரூபாய்... இரண்டு பாகங்கள் கொண்ட... புத்தகம். மகாத்மா காந்தியடிக... திவ்ய சரித்திரத்தையும் அப்... யாரது போதனைகளையும் த... கத்தே கொண்டு நிலவுகிற... முதல் பாகமான... உபோத்காதம் பிறப்பெய்தியகா... நாடுகாண்காதை துன்பமூண்... காதை கங்குல்குவிந்தகாதை வே... காண்காதை உரிமைநீங்கியகா... சிறைக்கோட்டக்காதை வினைதீர்... காதை என்னும் அதிகாரங்களா... இரண்டாம்பாகமானது, உண்... ஞானி ஸத்யாக்ரஹநிகழ்ச்சிக்கா... பஞ்சாப்படுவதை நிகழ்ந்த கா... உதவிமறுத்தல்எடுப்பித்தகா... உதவிமறுத்தல்தொடர்ச்சி ஒப்பற... மருந்து ஸ்வராஜ்யம் என்னும் அ... காரங்களாலும் வகுக்கப்பட்டு எ... தப்பெற்றிருக்கிறது. ஒவ்வொ... தேசாபிமானியின் வீட்டிலும் அ... சியம் இருக்கவேண்டியது. வேண்... பவர் "மதராஸ் தாகூர் கம்பெனிய... ருக்கு எழுதிப்பெற்றுக்கொள்ளவு...

---

### கண்டனூர்

ரோட்டு—:நாம் முந்தினவார... எழுதியபடி ரோட்டும் போட்டு... கொண்டு வருகிறார்கள். அதுபற்றி... சந்தோஷம்.

தெருக்கள்:—ஒவ்வொரு தெருக்... ளிலும் அடிக்கொருதபால்கூட்டிறு... களானல் நலம் கான்களிலுள்ள கு... பை மிகஅதிகமாயிருக்கறது. அ... யும் கூட்டாத வரையில் ஒன்றும் ச... யாக மாட்டாது. பழையவூரில் தெ... ருக்கள் பள்ளம் மோடாயிருக்கிறது... எல்லா வீதிகளும் சீர்பண்ணவேண்... டியிருப்பதோடு கான்கட்டாத வீதி... களும் இருப்பதால் அதில் வருகி... சாக்கடைத் தண்ணீர் போக வழி... செய்யவேணும். எல்லா விஷயத்தி... லும் வரிவாங்குகிற சுறுசுறுப்பு... போல் ஊரைவைத்துக் கொள்ளமாட்... டார்கள். ஆகையால் வரிப்பண... தைக் கொடுக்கும் நாம் அடிக்கடி... வனித்து எச்சரிக்கை செய்யவேண்... டும். அப்பொழுதுதான் ஊர்நன்று... இருக்கும்.

ஒருநிருப...



# தனவைசிய மகாநாடு.



துன்மதி-ஷு ஆனி-மீ கக-உ வியாழக்கிழமை பிற்பகல் மூன்று மணிக்கு
கோவிலூரில் கூடுகிறது.

நகரத்தார்யாவரும் முதல்நாளே வந்துசேரும்படி
கேட்டுக்கொள்கிறோம்.

கூட்டம் நடைபெறுதற்குவேண்டிய ஏற்பாடுகள் நடைபெறுகின்றன.

தனவைசிய ஊழியர் சங்கத்தார்.




### மானகிரி

(க)

ஆனி-மீ கஉ

சங்கத்தார் வந்து நகரத்தாரைக்கண்டு பேசினர்கள். அடுத்துநாலாறு நாளில் கூட விருக்கிற கூட்டத்தில் தீர்மானம் செய்து கொள்வதாகவும் மகாநாட்டிற்கு பிரதிநிதிதேர்ந்தெடுத்தனுப்புவதாகவும் வாக்களித்தார்கள்.

### உ. சிறுவயல்

ஆனிமீ உஉ

நகரத்தாரிடம் சங்கத்தார்விஷயங்களைச் சொல்ல மற்று நாள் கூட்டம் கூடி இன்னும் க0 தினத்திற்குள் தீர்மானம செய்து கொள்வதாகச் சொன்னர்கள். அந்தக் கூட்டத்திலேயே பிரதிநிதி தேர்ந் தெடுத்தது குறிப்பிடத் தக்கது.

### பலவான்குடி

ஆனிமீ ௩உ

பிற்பகல் ரு மணிக்கு ஸ்ரீமாந் சு. ராம. இராமசாமி செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் ஒருகூட்டம் கூடியது. ஸ்ரீமாங்களான மெ. சாமிநாதன் செட்டியாரவர்களும் ராய. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும்உபந்யசித்தார்கள். இரவு அ௨ மணிக்கு ஸபைநிறை வெய்தியது. அப்பொழுதே நகரத்தார்கள் தீர்மானம் செய்து விட்டதோடு மகாநாட்டிற்கு பிரதிநிதியும் தேர்ந்தெடுத்து விட்டார்கள்

### ௬. முத்துப்பட்டணம்

ஆனிமீ சஉ

பிற்பகல் ரு மணிக்கு இவ்வூர் மடத்தில் ஒருகூட்டம் கூட்டப்பெற்றது. ஸ்ரீமாந் நா. அரு. நாகப்பசெட்டியாரவர்கள் அக்கிராஸனம் வகிக்க ஸ்ரீமாங்களான, பிச. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும், மெ. சாமிநாதன் செட்டியாரவர்களும், ராய. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும் உபந்யசித்தார்கள். இரவு கூ மணிக்கு கூட்டம் முடிவுற்றது. கூடியசிக்கிரம் பிரதிநிதி தேர்ந்தெடுப்பதாகவும் தீர்மானம் செய்து விடுவதாகவும் நகரத்தார் சொன்னர்கள்.

### ஆத்தங்குடி

ஆனிமீ ருஉ

சங்கத்தார் நகரத்தாரைக் கண்டு விஷயங்களைச் சொன்னர்கள். புதன் கிழமை யன்று கூட்டம் கூடி தீர்மானம் செய்து கொள்வதோடு பிரதிநிதி தேர்ந்தெடுப்ப தாகவும் சொன்னர்கள்.

### பிள்ளையார்பட்டி

ஆனிமீ ருஉ

நகரத்தாரிடம்சங்கத்தார் விஷயங்களைச் சொல்ல தீர்மானம் செய்து கொள்வதாகவும் பிரதிநிதி தேர்ந் தெடுத்தனுப்பு வதாகவும் சொன்னர்கள்.

### சிறுவயல்

ஆனிமீ ருஉ

மாலை ருமணிக்குநகரச்சிவன்கோவிலில் ஒருகூட்டம்கூட்டப்பெற்றது. அமராவதிபுதூர் ஸ்ரீமான் பிச. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் அக்ராஸனம் வகித்தார்கள். ஸ்ரீமாங்களான சுப. மெய்யப்ப செட்டியார் அவர்களும் ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்களும் உபந்யசித்தார்கள். இரவு அ௨ மணிக்கு ஸபை மிக ஆநந்தமாக நிறை வெய்தியது. பிரதிநிதி தேர்ந்தெடுத்தனுப்புவதாகச் சொன்னர்கள்.

(உ)

### விராமதி.

ஆனிமீ ௩உ

நகரத்தார்களில் பலரைக்கண்டு பேசப்பட்டது. கீழச்சிவல்பட்டியார் தீர்மானஞ்செய்ததும் அதையனுசரித்து சிலதினங்களில் செய்து கொள்ளுவதாய் வாக்களித்துள்ளார்கள்.

### சிறுகூடல்பட்டி

ஆனி-மீ ௩உ

மாலை சமணிக்கு சிவன்கோவிலில் ஸ்ரீமாந். சு. வெ. சு. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள் தலைமையில் ஸ்ரீமாங்களாகிய வி. சா. காசிவிஸ்வநாதன்செட்டியாரவர்களும் வ. சு. சு. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களும், சு. பழநியப்பா அவர்களும், கூ௨மணிவரை உபந்யாசஞ் செய்தார்கள் வந்தனஉபசாரம் சொல்லப் பட்டு கூட்டம் முற்றுப் பெற்றது.

சிலதினங்களில் தீர்மானஞ் செய்யாத மற்றவர்களும் தீர்மானஞ் செய்து கொள்ளுவதாயும் மஹாநாட்டுக்கு பிரதிநிதிகள் அனுப்புவதாயும் வாக்களித்துள்ளார்கள்.



நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி ஆனிமீ கக-உ.

## கோவிலூர்க் கூட்டத்தில கவனிக்கவேண்டிய விஷயங்கள்.

கோவிலூரில் கூட்டம் கூடப்போகிறது. அதில், நான்கு தீர்மானங்கள் செய்யப்போகிறார்கள். முதலாவது பெண்ணுக்கு வாங்குவதைப் பற்றியதாகும். பெண்ணுக்குப்பணம் வாங்குவது நியாயமில்லையென்று யாவரும் சொல்கிறார்கள். ஆனால், இரண்டு வராகனாவது மூன்று வராகனாவதுவைத்தால் கட்டாயம் நிலைக்குமென்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். மேல வட்டகையில் சாதாரணமாகவே இரண்டு வராகன்தான் கொடுக்கப்படுகிறது. அவர்களுக்கு மூன்றுவராகனென்று தீர்மானம்செய்துகொள்ள அவசியமென்ன? தெற்கு வட்டகையிலும் சாதாரணமாக இரண்டு மூன்று வராகனே நடைபெறுகின்றன. அவர்களுக்கு இந்தத் தீர்மானத்தாலென்ன பிரயோஜனம்? வந்திருக்கிற வழக்கத்திற்கு ஏதாவது வைத்தல்வேண்டுமென்று கருதக்கூடாது. பன்னிரண்டு வராகன் நடக்கிற வட்டகைக்கு நாலு வராகன் வைத்தாலும் சாதகந்தான். ஆனால் மற்ற வட்டகையாரையும் உத்தேசிக்க வேண்டுமல்லவா? தவிர கொஞ்சம் இழுவையிருந்தாலும் விடாது. அறுபது வருஷத்திற்கு முந்தி நூற்றிருபதுவராகன் வைத்ததால்தான் வளர்ந்து வளர்ந்து பெரிதாகி விட்டது. இப்போது தீர்மானம் செய்தாலும் "அரைக்காசு கூட வாங்குவதில்லை ஆனால் கலியாணச்செலவுக்கு இவ்வளவு வாங்குவது" என்றுதான் தீர்மானம் செய்யவேண்டும். தொண்ணூற்றுநூறும் கூடிப்பணம் வாங்குகிறதென்று தீர்மானித்தல் வெட்கம்! மற்ற ஜாதியார் சிரிப்பார்கள். இன்னொன்று கவனிக்க வேண்டும். ஒரு தாரமிருக்க வைத்துவிட்டு மறுதாரம் செய்தவர்கள்தான் கணக்கில்லாமல் தொகை கொடுக்க முற்பட்டனர். தொகை அதிகமாக ஏறியதற்கு இஃதொரு காரணம். அதிகப்படியாக வயது சென்றவர்கள் விவாகம் செய்து கொள்ளவேண்டுமென்று விரும்பி பணத்தை ஏராளமாகக் கொடுக்க முன்வந்து விட்டனர். இதுமற்றொரு காரணம். இவ்விரண்டினாலுந்தான் கணக்கின்றித்தொகையேறியது. பிறகு இந்தத் தோதுகளையநுசரித்து அதிகத்தொகை சகஜமாகி விட்டது. இவ்விரண்டுக்கும் இப்போது கூடுகிற கூட்டத்தில் ஒரு வரம்பு கட்டவேண்டும். எப்படியும் இத்தனை வருஷத்திற்கு மேற்பட்டவர் கலியாணம் செய்து கொள்வதில்லையென்ற தீர்மானம் கட்டாயம் செய்யப்பட வேண்டும். எப்பொழுதும் அதிகமாகத்தொகையேறுவதற்கு மூல காரணமெங்கேயிருக்கிறதோ அதைக் கவனித்துப் பரிகரித்தல் வேண்டும்.

சீர்முறை கொடுக்கிற விஷயத்தில் பாத்திர பண்டங்கள் கொடுத்தல் போட்டிமேல் போட்டியாகப் போய்க்கொண்டிருக்கிறது. இனை அளவு கட்டிவிட வேண்டுமென்பது பலருடைய அபிப்பிராயம். அதிகப்பட்டிருப்பதைக் குறைத்து அளவு கட்டுவது ஒரு முறையாகும். ஆனால் இதைவிட சிறந்த முறையொன்றிருக்கிறது. அளவுகட்டினால் தினந்தோறும் அதை விசாரிப்பதும் கட்டுப்படுத்துவதும் பஞ்சாயத்து செய்வதும் ஓயாத வேலைகளாக விருக்கும். நேரே மூல காரணத்தைக் கண்டு அஸ்திவாரத்தையே இவ்விஷயத்தில் மாற்றி விடுவது சுலபமாகவிருக்குமென்று பலரபிப்பிராயப்படுகிறார்கள். இப்போது சீர்முறையாகக் கொடுக்கப்படுகிற சாமான்கள் முற்றும் பெண்ணின் தாய்வீட்டாருடையதாகவே கருதப்பட்டு மாப்பிள்ளை வீட்டில் பந்தோபஸ்து செய்யப்பட்டிருக்கின்றன. பெண்ணுக்கு ஏதாவதென்றால் அத்தனை சாமானும் திருப்பிக் கொண்டு போகிற நிலைமையிருக்கிறதேயன்றி புருஷனுக்கு ஒருதுரும்பு கூடச் சொந்தமாகவில்லை. இந்தமுறையால்தான் தாய்வீட்டார் கணக்கற்ற சாமானைப் போட்டிபோட்டு வாங்கி அடுக்கி விடுகின்றனர். "கலியாண வீட்டில் வைக்கிற சாமான் அத்தனையும் மாப்பிள்ளைவீட்டாரைச் சேர்ந்தது" என்று தீர்மானம் செய்யப் பட்டுவிட்டால், தானேசாமான் வைப்பது குறைந்து விடும். குழந்தைகள் பிறந்தபிறகு வேண்டியதை வாங்கிக் கொடுப்பார்கள். அப்போது ஒருவர் தோதை யொருவர் பின்பற்றி வாங்க நேராதல்லவா? வீணாக உபயோகமில்லாமல் பணத்தை வாரியிறைத்துக் கண்டசாமானையெல்லாம் வாங்கி வீடுகளில் சுக்கு வசம்பிட்டுப் பூட்டிவைப்பதால் பயனென்ன? கல்யாணம்செய்து முப்பது வருஷமானபிறகு பிள்ளையில்லாமல் பெண் இறந்துபோனால் பழைய பட்டியலையெடுத்துக் கணக்குப்பார்த்துப் பணங்கேட்டு வியாஜ்ஜியங்கூடத்தொடர்ந்துவிடும் படியான காலம்வந்திருக்கிறது. சாதாரண காலத்தில் உபயோகித்த சாமானுக்குக்கூட பலரிடத்தில் விலைவாங்கவும் நேர்ந்து விடுகிறது. இம்முறையால் புருஷனுக்கும் மனைவிக்கும் மாமிக்கும் மருகிக்கும் பேதம் மேற்பட்டுவிடுகிறது. இன்னுமொன்று. வாங்கிச்செய்கிற வீட்டாரும் அம்தபணத்தில் கொஞ்சத்தை சீர் முறையாகவும் ஸ்ரீதனமாகவும் கொடுத்துவிட்டுப்பிறகு பெண் இறந்துவிட்டால், சொத்துக்களைக் கணக்குப் பார்த்துக் கேட்பதையும், ஸ்ரீதனப் பணத்திற்கு வெயன் வட்டியுடன் கேட்பதையும் பலர் அறிந்திருப்பர். இது ஒரு முக்கியமானவிஷயமாகையால் நன்றாக யோஜித்து விசாரித்து ஒருமுடிவு செய்யவேண்டிய அவசியமாகும். தீர்மானம் செய்வதைக்காட்டிலும் அநுஷ்டானத்தில் நிலைத்து நிற்கவேண்டியது மிக அவசியமான படியால் அதற்குண்டான மூல காரணங்களைக் கண்டு தீர்மானங்கள் செய்யப்பெற வேண்டும்.



## எண்டிசைக்காட்சி.

**வதந்தி.**

லட்ச ரூபாய் பெறுமானமுள்ள வீட்டுக்கு முன்னூற்றறுபது ரூபாய் வரி விதிக்க வேண்டுமென்று இராமநாதபுரம் ஜில்லா போர்டில் மெஜாரிடி தீர்மானமாகி யிருக்கிறதென்று ஒரு பலமான வதந்தி உலவுகிறது. இது உண்மையானால் ஜனங்களுள் பெருங் கிளர்ச்சியுண்டாகுமென்பதில் ஆட்சேபமில்லை. விபரம் நன்றாகக் கிடைத்தவுடன் நமதபிப்பிராயத்தை வெளியிடுவோம்.

**பரிதாபம்!**

ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசுவர வித்தியாசாலையிலிருந்து பத்தாம் வகுப்பு (School final) பரீக்ஷைக்குச் சென்றவர்கள் பத்தொன்பது மாணவராவர். ஆனால் தேறியவர் ஒருவர் தானென்று தெரிகிறது. சென்ற வருஷத்தில் பன்னிருவர் பரீக்ஷைக்குச் சென்று பதின்மர் தேறி விட்டனர். ஒரு வருஷ காலமாக விடிய விடியப் படித்த நமது மாணவர்கள் மிக்க கவலையுறுவ ரென்பதில் சந்தேகமில்லை. என் செய்வது? அவசியமில்லாத படிப்பெல்லாம் பஞ்ச பூதங்களையும் அடக்கிப் படித்தாலும் பரீக்ஷை தேறினதாகப் பத்திரம் கிடைக்கவில்லை. பரிதாபம்!!

**உதார குணம்.**

பம்பாய் வாசியான வேல்ஜி லக்குமஸி என்ற ஒரு வியாபாரி ஸ்ரீதிலகர் சுயராஜ்ய நிதிக்கு ஐம்பதினாயிரம் ரூபாயும், சேத் ஆனந்தலால் என்பவர் ஷை நிதிக்கு இரண்டு லட்சம் ரூபாயும் கொடுத்திருக்கிறார்கள். தேசீயப் பொது முயற்சிக்கு பம்பாய் லட்சம் லட்சமாகக் கொடுத்துதவுகிறது. அங்குள்ள வியாபாரிகள்-தனிகர்களுடைய உதார குணம் போற்றத்தக்கதாயிருக்கிறது. ஆனால் தமிழ் நாட்டில் இதுவரை ஷை நிதிக்கு ரூபாய் ௩,௫000 தான் வசூலாகியிருக்கிறது. வெட்கம்!

**வெளிநாட்டிலுள்ள வாலிபர்கள்.**

தனவைசிய வாலிபர் சங்கங்கள் நமது நாட்டில் பல ஊர்களில் தோன்றி நல்ல வேலைகளைச் செய்து வருகின்றன. இதுவரை ஷை சங்கங்களில் பல நூறு அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கின்றனரென்றும் இன்னும் தினந்தோறும் சேர்ந்துகொண்டே வருகின்றனரென்றும் அறிந்து மகிழ்கிறோம். வியாபாரத்தை முன்னிட்டு வெளிநாடு சென்றிருக்கும் வாலிபர்களும் தங்கள் தங்களூரில் அல்லது அடுத்த ஊர்களிலுள்ள வாலிபர் சங்கங்களின் மூலமாக அங்கத்தினராதல் வேண்டும். அப்படி ஆயிரக்கணக்கான அங்கத்தினர்கள் சேர்ந்துவிடுவார்களானால் சமூகத் திருத்தங்கள் மிக எளிதாக நடைபெறும்.

## உள்ளூர்வர்த்தமானம்.

**ராமாயணப்ரசங்கம்:—**

நாளிதுமீ கசஉ திங்கட்கிழமை மாலை ௫-௩௰ மணிக்கு ரீடிங்ரூம் கட்டிடத்தில் தஞ்சாவூர் பிர்மஸ்ரீ சொக்கராஜபாகவதர் அவர்கள் பக்கவாத்தியங்களுடன் "ஸ்ரீராமஜனனம்" என்னும் கதையை நடத்துவார்களென்றறிகிறோம்.

ஹிந்துமதாபிமான சங்கம்:—நேற்று பிற்பகல் ௫-௰-மணிக்கு ஸ்ரீமான் மோ. வே. கோவிந்தராஜய்யங்காரவர்கள் அக்கிராசனத்தில் ஸ்ரீசுப்பிரமணிய சிவமவர்களால் "மானிட ஜன்மத்தின் பிரயோஜனம்" என்ற விஷயமாக நீண்ட பிரசங்கம் நடைபெற்றது. இரவு சுமார் ௯-மணிக்குக் கூட்டம் நிறைவெய்தியது.

காய்கறிகளின் சவுதம்:—இந்த வாரத்தில் கலியாணங்கள் ஏராளமாக நடைபெறுகிறது என்றாலும் காய்கறிகள் இலை முதலிய சாமான்களின் விலை மிக சௌகர்யமாகவேயிருக்கின்றன. ஏழைகள் மிக சந்தோஷமடைகின்றனர். அளவோடு வாழ்ந்தால் யாவருக்கும் சந்தோஷமும் சுகமும் ஏன் கிடைக்காது?

தேசீய உபந்யாசம்:—சென்ற செவ்வாயன்று நாகநாதபுரம் கீழ்கரையில் ஸ்ரீமான் மோ. வே. கோவிந்தராஜய்யங்கார் அவர்கள் தலைமையில் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சிவம் அவர்களின் உபந்யாசம் நடைபெற்றது. ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனரெனினும் கூட்டம் சுமாராயிருந்தது. சிவம் அவர்கள் பிரசங்கத்திற்கு வரும்பொழுதும் போம்பொழுதும் தேசிய பஜனை கோஷ்டியுடனேயே வந்தார்கள்.

உத்சவம்:—இவ்வூர் நாகநாதபுரம் சிவன் கோவில் உத்சவம் நேற்றுடன் இனிது நிறைவெய்தியது.

## இராமச்சந்திரபுரம்.

பூமீஸ்வரர் ஹைஸ்கூலிலிருந்து பத்தாவது வகுப்புப் பரீக்ஷைக்குச் சென்ற பதினாறு மாணவரில் பதின்மூவர் தேறியிருக்கின்றனரென்று தகவல் எட்டுகிறது.

## தந்திச் செய்தி.

பினங்கு ஆனிமீ ௯௦௨

மதராஸ் உண்டியல்விலை நூற்றெழுபத்தெட்டு.
சயம் விலை எண்பது.
ரப்பர் விலை இருபத்தொன்று.

சைகோன் ஆனிமீ ௯௦௨

மதராஸ் உண்டியல்விலை நூற்றுத்தொண்ணூற்றேழு.
சிங்கப்பூர்வட்டம் பதினொன்று.

இரங்கூன் ஆனிமீ ௯௦௨

பினங்கு உண்டியல் விலை நூற்றெண்பது.
நெல் விலை இருநூற்றுநாற்பது.
தான்யங்களின் விலை அதிகரித்திருக்கிறது.
அரிசி விலை கொஞ்சம் இறங்கியிருக்கிறது. பணம் சவுதம்.

கன்னிக்குயின் ஆனிமீ ௯௦௨

ஆனிமீ ௰௩உகூட்டத்தில்தவறு செய்து ஒன்பது-கோவில்களிலும் கட்டுப்படுத்திப், பெண்ணுக்குப் பணமே கொடுக்காதிருக்கும்படி தீர்மானம் செய்யுங்கள்.

நகரத்தார்.

பக்கோக்கூ ஆனிமீ ௯௦௨

ஆனிமீ ௰௩உ கோவிலூரில் கூடுகிற மகாநாட்டில் முன் ஆலோசித்தபடி பெண்ணுக்குப் பணம் வாங்குகிறவிஷயத்தைப் பேசி முடிவுக்குக்கொண்டுவாருங்கள்.

நகரத்தார்.

## பொதுவர்த்தமானம்

ஸ்ரீமாந் சு. அ. ராம. ராமநாதன்செட்டியாரவர்கள் தஞ்சாவூர்ஜில்லாபோர்டுமெம்பராக போட்டி இல்லாமல் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்களென்று தஞ்சாவூரிலிருந்து ஒருநிருபர் அறிவிக்கிறார்.

***

துன்மதிவரு ஆனிமீ சுஉ கடியாபட்டி தேர் உற்சவத்தன்று சிவன்கோவில்குளத்தில் சில பிராமணப் பையன்கள் நீர்விளையாட அதில் கக வயதுள்ள ஓர் பையன் நன்குதண்ணீர்சாப்பிட்டு விட்டதால்இறந்து விட்டான். போலீஸ்அதிகாரிகள்வந்து பார்த்து பிரேதத்தைஅப்புறப்படுத்தி தேர் இழுக்கப்பட்டது.

***

துன்மதிவரு ஆனிமீ ஒஉ கடியாபட்டி அம்மன்கோவிலில் பிற்பகல் சு மணிக்கு ராயபுரம்ஸ்ரீமாந் வெ.அ.சு. அழகப்பசெட்டியாரவர்கள்தலைமையில் ஸ்ரீமான்களாகிய அரிமளம் பழ.அண்ணாமலைசெட்டியாரவர்களும், வ.சு. சு. சுப்பிரமணியன்செட்டியாரவர்களும், சு. பழனியப்பா அவர்களும்உபந்யசித்தார்கள் எ மணியோடுதலைவர் முடிவுரையுடன்வந்தனோபசாரஞ்சொல்லப்பட்டுக் கூட்டம் முற்றுப்பெற்றது.

***

ஆனிமீ எஉ கடியாபட்டி தனவைசியவாலிபர் சங்கக்கூட்டம் மெய்யப்பனியார் வீட்டில்சங்கத்தலைவராகிய ஸ்ரீமாந் சு. பழனியப்பாஅவர்கள்தலைமையில் பிற்பகல்ங மணிக்குஸ்ரீமாந் பழ, அண்ணாமலைசெட்டியாரவர்களும் வ. சு, சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும்வாலிபர் கவனிக்கவேண்டிய விஷயம் உபந்யசித்தார்கள். சு மணியோடுதலைவர்முடிவுரையுடனும்வந்தனோபசாரத்துடனும்கூட்டம்முற்றுப் பெற்றதென்று காரியதரிசி அறிவிக்கிறார்,

***

ரங்கூனில் அரிசி வியாபாரத்திற்குச் சற்றுக் கஷ்ட மேற்பட்டிருக்கின்றது க00 கூடை நெல்லின் விலை உச0 ரூபாயாக உயர்ந்திருக்கிறது. நிலைமை சரியாகுமளவும் வரை வியாபாரஞ் செய்வதில்லையென இந்திய வியாபாரிகள் முடிவுசெய்துவிட்டனர். கவர்ண்மெண்டார் இவ்விஷயத்தில் தலையிடும்படி இந்தியக் கவர்ன்மெண்டுக்கும் தந்தி கொடுத்திருக்கின்றனர்.

காரைக்குடிசெந்தமிழ்க்கழகம்என்றுபெயர்கொண்டசங்கமொன்றுசிலநாட்கு முன்னர் இவ்வூரில்ஸ்தாபிக்கப் பெற்று நடந்து வருகிற விபரம் பத்திரிகை வாயிலாகமுன்னமேபலரும்அறிந்திருப்பார்கள். தாய்மொழியாகிய தமிழ்மொழியினை வளர்ப்பதற்கு வேண்டிய நன்முயற்சிகளை எடுத்துக்கொண்டு நிறைவேற்றுவதனையேபெருநோக்கமாகக்கொண்ட இக்கழகம்மேன்மேலும்அபிவிருத்தியடைந்து சிறந்துவிளங்க வேண்டுமென்பதுதமிழபிமானிகளாகியயாமெல்லாருக்கும் மனவுறுதியுடன் இருக்கவேண்டிய சாஸ்வதக்கொள்கையாகும்நமதுதேசத்தில் மற்றபாகங்களிலுள்ளோர்பலரும்தத்தமது தாய்பாஷையினைவளர்க்கும்தொழிலில் மிக ஊக்கத்தோடுழைத்து வருவதைக்கண்ணுற்றும் நமதுதமிழ்நாட்டிலுள்ளோர், யாவற்றினும்பழமைவாய்ந்ததும்உயரியசொல்வளம் பொருள் வளம் பொருந்தியதுமான தமிழ்மொழியினை மறந்திருத்தல் மிகவும் பரிதபிக்கத்தக்கதொன்றாகும். ஆகவேசெவ்விய நோக்கத்தோடு ஸ்தாபிக்கப்பட்ட இக்கழகம் பழைய தமிழ்நூற்களை அச்சிட்டு வெளிப்படுத்துவதோடு மாத்திரம் நில்லாமல் தற்காலத்தில் நமது நாட்டிற்கு மிகவும் இன்றியமையாத மேனாட்டு சாஸ்திரங்களை அதிகவிரைவில் தமிழாக்குக்கொண்டு வருவதில் மிகுந்த ஊக்கத்தோடு முயற்சிக்குமென்று எதிர்பார்க்கிறோம். எந்த நன்முயற்சியும் பொருள் முட்டுப்பாடில்லாதபொழுதே நன்கு நிறைவேறுமாதலால் முன்னம் ஏற்படுத்தியுள்ள வழிகளையநுசரித்தே நமது கழகத்தின் காரியதரிசியவர்கள் வேண்டிய மூலதனத்தைக் கூடிய சீக்கிரத்தில் சேர்ப்பார்களென்று நம்புகிறோம். நகரத்தார்களின் வீடுகளில் நடக்கும் விசேஷகாலங்களில் தமிழுக்கு சம்பாவனைசெய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டபிரகாரம் அடியிற் கண்ட கனவான்கள் நேரிற் குறிப்பிட்ட தொகைகளை நன்கொடையாகக் கழகத்திற்கு அளித்துள்ளார்கள் என்பதைக் கேள்வியுற மிகவும்சந்தோஷமடைகிறோம். ஸ்ரீமான் மெ. நா. சித நாகப்பசெட்டியார் அவர்கள் ரூ. க00. ஸ்ரீமான் ப. மெ. மெ. அருணாசலம் செட்டியாரவர்கள் ரூ. உ. ஸ்ரீமான் சு. ராம. அரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் ரூ. ரு. ஸ்ரீமான் முத்து. அரு. சாமிநாதன் செட்டியார் அவர்கள் ரூ, க0. நகரத்தார்கள் யாவரும் இவ்வனுஷ்டானத்தை மேற்கொண்டு தமிழைப் பரிபாலிப்பார்களென்று எண்ணுகிறோம். கூடிய சீக்கிரத்தில் இக்கழகம் பல்லாற்றானும் மேம்பாடடைந்து நமது காரைக்குடிக்கு ஓரணிகலனாய்த் திகழவேண்டுமென்பது எம்மனோரின் பெருவிருப்பம். மேலும், இக்கழகத்தின் சார்பிலேயே இவ்வூரிற் செந்தமிழ்க் கலாசாலை யொன்று ஸ்தாபிக்கப்பெற்று உயரிய தமிழ் நூல்களை மாணவர்க்குப் போதிக்கும்படியான நல்ல ஏற்பாடுகளைச் செய்ய இக்கழகத்திற்குப் போதிய வன்மை தந்தருளுமாறு தமிழ் முதற்கடவுளாகிய ஸ்ரீ நடராஜமூர்த்தியினை பிரார்த்திக்கிறேன்.

தமிழ்விரும்புவோன்.

## மதுரையில் ரிஷிக்கழுகுகளின் தரிசனம்.

சென்ற சுஉ மதுரை மீனாக்ஷியம்மன் கோயிலில் காலை க0-மணிக்கு இரண்டு பிரம்மாண்டமான வெள்ளைக்கழுகுகள் விஜயம் செய்தன. அங்குவந்து புஷ்கரணியில் ஸ்நானம் செய்துவிட்டு கோயிலைப் பிரதக்ஷணம் செய்து சந்நிதியண்டை வந்துசேர்ந்தன. தேவஸ்தான அதிகாரிகள் இத்தெய்விகக் கழுகுகளின் உருவத்தைக்கண்டு வியந்து இதனை வாவேற்று அன்னமளித்தார்கள். அவை பூர்ணமாய் அன்னமருந்தியதும், அவைகளை சுவாமி அம்மன் சன்னதிகளுக்குள் அழைத்துச் சென்றார்கள். அங்கு சுவாமி அம்மன் தரிசனம் செய்தபின்னர் அவ்விரண்டும் கோயில் தோட்டத்தில் வந்து சில மணி நேரம் தங்கியிருந்தன. இவைகளைப் பார்க்க நகரவாசிகள் திரள் திரளாகத் திரண்டுவந்து தரிசித்து இவை தெய்விகக் கழுகுகள் என்றே போற்றினார்கள். இவ்விரண்டு கழுகுகளும் திருக்கழுக்குன்றத்தினின்று சுவாமி தரிசனார்த்தம் இக்கோயிலிற்கு வந்ததாகச் சொல்லப்படுகின்றது. சென்ற ஒரு மாதத்திற்கு மேலாக இக்கோயிலில் பிராமணர் பிராமணரல்லாதார் கலகமேற்பட்டு பூஜை புனஸ்காரம் இன்றி கோயில் அடைபட்டிருந்த துக்கம் பொறுக்கமாட்டாமல் மனம் நொந்து இக்கழுகுகள் சன்னிதிக்குவந்து அம்பாளையும் சுவாமியையும் தரிசித்துத்துயர்தீர்த்து சென்றது என்று இவ்வூரார் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இக்கழுகுகளைப்புகைப் படமும் எடுத்திருக்கிறார்கள். இதன் பலன் இன்னவென்பது இனித்தான் திட்டமாகத் தெரியவேண்டியதாயிருக்கின்றது.

## கண்டனூரில் உபந்யாசம்.

கண்டனூரில் தனவைசியவாலிபர்சங்கத்தின் ஆதரவில் கரு-தேதி செவ்வாய்க்கிழமை பிற்பகலில் ஸ்ரீமான் சொ. மு[illegible]கப்ப செட்டியாரவர்களும், ஸ்ரீமான் பி[illegible] சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் உபந்யசிப்பார்கள் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.



# இளைஞர் பகுதி.

## தைரியம்.

மக்களாகப் பிறந்தவர்கட்கு இன்றியமையாதது "தைரியம்" ஒன்றேயாகும். இது இல்லாது வேறு எத்துணை நற்குணங்களிருந்தாலும் பயன்றராமாட்டா. ஏனென்றால்? நல்லெண்ணங்களுடைய பலர் தீய காரியங்களைச் செய்து வருவதை நாம் பார்க்கின்றோம். அதாவது:—ஒருவர் கோவிலுக்கு ஆடு வெட்டுகின்றார். அது கெட்ட காரியம். அதைச்செய்தால் பிறகு அதன் பயனை அநுபவித்துத் தீரவேண்டும் என்பதை நன்றாக உணர்கின்றார், உணர்ந்த பிறகும் மனைவிக்குப் பயந்தோ வழக்கத்திற்குப் பயந்தோ வேறு எதற்குப் பயந்தோ அந்தத்தீய காரியத்தைச் செய்து விடுகின்றார். எண்ணம் நல்ல எண்ணம் தான்; ஆனால் செய்கையோ கெட்டசெய்கை. காரணமென்ன தைரியமின்மையே. மற்றொருவர் அர்த்தமில்லாதபடிபோட்டிபோட்டுக் கொண்டு செலவழிக்க ஆரம்பிக்கின்றார். செலவழிப்பதில் அவருக்குக் கொஞ்சங் கூடப் பிரியமில்லை. ஆனால் கல்யாணத்திற்கு ஐம்பது ஆயிரத்துக்கு மேல் செலவாகி விடுகிறது. காரணம் என்னவென்று விசாரிக்கும் பொழுது, "என்ன செய்வது அனாவசியமாய்செலவழிப்பதிலொரு பிரயோசனமுமில்லை. நல்ல காரியங்களிலே செலவிட்டால் புண்ணியமுண்டு என்பதை யானறிவேன்; என்றாலும் பெண்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள் ஆனபடியினாலே செலவழித்துத் தான் தீரவேண்டியிருக்கின்றது" என்று சொல்கின்றார். இதற்கு என்ன அர்த்தம். இது எதைக் காட்டுகின்றது அவருடைய அச்சத்தை அதாவது தைரியமின்மையைக்காட்டுகின்றது. இவை மாத்திரமல்ல. இன்னும் எவ்வளவோ கொடிய காரியங்களை எல்லாம் செய்கின்றார்கள். நல்லெண்ணமுடைய பலர் தைரியமின்மையினாலே. எவ்வளவோ படித்தவர்கள் அறிவாளிகள் தேசாபிமானம் மதாபிமானம் பாஷாபிமானம் ஜாதியபிமானம் கொண்டவர்கள் கூட பிறவிப் பயனையறிந்தும் செய்கையிற் காட்ட முடியாதவர்களாகி தங்கள் வாணாளை வீணாக்கி ஜென்ம சாபல்யத்தையடையமுடியாது இந்நிலவுலகத்திலே கிடந்து உழல்கின்றார்கள். தைரியமில்லாத ஒரே காரணத்தினால் அறியாத மற்றவர்கள் தைரியத்தைக் கைவிடுவது இயல்பு. மேற்குறித்தவர்கள் தைரியத்தைக் கைவிட்டு அச்சத்தை ஆபரணமாக அணிந்து கொண்ட பிறகு தான் நம்முடைய நாடு நம்முடைய மதம் நம்முடைய பாஷை நம்முடைய ஜாதி நம்முடைய தர்மம் நம்முடைய பெருமை நமது பெண்கள் மானம் முதலிய எல்லாவற்றையும் நாம் இழந்தோம்.

எனது இளஞ்சகோதரர்களே !

எதிர் காலத்தில் சுக துக்கங்களை அநுபவிக்க வேண்டியவர்கள் நாமே. நம்முடைய வாழ்க்கையை இப்பொழுதே நாம் செம்மைப் படுத்திக் கொண்டு சென்றால்தான் எதிர்காலத்தில் கஷ்டமின்றி வாழமுடியும். அதற்கு நாம் இப்பொழுது யாது செய்தல் வேண்டும். புராதனப் பெருமைகளை நாமடைவதற்கு இடைவிடாத ஊக்கத்தோடு அளவிலா முயற்சிகொண்டு நுண்ணறிவோடு உழைத்தல் வேண்டும். உழைத்தால் புராதனப் பெருமைகளை அடையலாமா என்றால் எத்தகைய நல்லெண்ணத்தோடு எவ்வளவு முயற்சி நாம் செய்தாலும் தைரியமில்லையானால், எண்ணிய காரியம் ஒன்றும் முடியாது. நல்லகாரியத்தை நாம் செய்துகொண்டு செல்லுகிற பொழுது இடையூறுகள் பல நேருவது உலகவியல்பு. அதற்காக முயற்சியை நிறுத்துதல் அறிவுடைமையாகாது. அந்த இடத்தில் நல்ல தைரியமிருந்தால்தான் மேனோக்கிச் செல்ல முடியும். நமக்கு ஆக வேண்டியது நாம் கொண்ட கொள்கை. நம்முடைய வேலைக்குக் குறுக்கே என்ன இடையூறு நேர்ந்தாலும் அதை நாம் பொருட்படுத்தப்படாது. "மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார், எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் செவ்வி-அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார், கருமமே கண்ணாயினார்" என்றபடி நமது காரியத்திலேயே கருத்தைச் செலுத்திக்கொண்டு செல்லல்வேண்டும். நெற்றிக்கண்ணைத் திறந்துகாட்டிய சாட்சாத் சிவபெருமானுக்கும் அஞ்சாது, "உம்பரார் பதிபோலாக, முற்று நீர் கண்ணும் மொழிந்த தம்பாடல், குற்றம் குற்றமே" என்று உண்மையைத் தைரியத்தோடு எடுத்துரைத்த நக்கீரனது தைரியம் போன்ற தைரியத்தை நாமடைதல் வேண்டும். "நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம் நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம் ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே எந்நாளும் துன்பமில்லை" "அஞ்சுவதியாதொன்றுமில்லை அஞ்சவருவதுமில்லை" என்று நாம் யாவர்க்கும் இடைவோமல்லோம் முதலிய திருப்பாசுரங்களை அருளிய நம்முடைய சைவசமய ஆச்சாரியருள் ஒருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகளைப் போல தைரியத்திற் சிறந்து நாம் விளங்கவேண்டும்.

"நச்சை வாயிலே கொணர்ந்து நண்பரூட்டு போழ்திலும் அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே. பச்சை ஊன் இயைந்தவேற் படைகள் வந்த போழ்திலும் அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே. உச்சி மீதுவானிடிந்து வீழுகின்றபோழ்திலும் அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே. இச்செகத்து ளோரெலாம் எதிர்த்து நின்ற போழ்திலும் அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே" என்ற செய்யுட்களை மனத்திருத்திக் கொண்டு கெம்பீரமாக நியாயமான காரியத்தைச் செய்து கொண்டே செல்லுதல் வேண்டும். நாம் அதர்மங்களைக் களைந்து தர்மத்தைநிலை நாட்டயத்தனிக்கும்பொழுது இடையிலே நேரும் சில இடையூறுகட்குப் பயந்து விஷயத்தை விட்டு விடுவோமானால் கடமையிற்றவறிய பாபத்திற்கு ஆளாவோம். நாம் தவறான காரியங்கள் கூடாதென்று எடுத்துக் கூறும் பொழுது அதற்குக் கோபிப்பவர் செயலைக்கண்டு நாம் அஞ்சுவது பெருத்ததவறு. தேசத்திற்குத் துரோகஞ் செய்யப்படாது என்று நியாயத்தை நாம் சொன்னால் தேசத் துரோகிகட்கு அது கோபமாகத்தான் தோன்றும். அதுபோலவே கட் குடிக்கப்படாதென்று கூறும பொழுது அதனைச் செய்வாரும் கொலை செய்யக் கூடாது களவு செய்யக் கூடாது என்பனவற்றைச்சொல்லும்பொழுது அந்தக்காரியங்களைச் செய்வாரும் சினமுறுதல்இயல்பல்லவா? தவறான சில காரியங்களை நாம் எடுத்துச் சொல்லும்பொழுது அவ்வவற்றிற்கு உரியார் சிலர் கடுகடுக்கலாம். அதற்குப் பயந்து நாம் விட்டுவிடப்படாது.

ஆனால், நமது காரியத்திற் கவனமாக தைரியத்தை அடிப்படையாகக்கொண்டு நாம் செல்லவேண்டுமே யல்லாமல் இடையூறு செய்வார்க்கு இடையூறு செய்யவோ அல்லது அவர்கள் பேரில் கோபங்கொண்டு அவர்களைப் போல நாமும் அர்த்தமற்ற வார்த்தைகளைப் பேசவோபுறப்பட்டு விடப்படாது. அங்ஙனம் நமது நல்ல காரியத்திற்கு இடையூறுசெய்வோர் ஒரு சிலர் இருந்தால் "பண்பல்ல நமக்கிழைப்போர் அறிவு திருந்துக" என்றபடி அவர்கட்கு நல்ல புத்தியைக் கொடுக்க வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கவேண்டும். "தம்மை இகழ்ந்தமை தாம் பொறுப்ப தன்றிமற், றெம்மை இகழ்ந்தவினைப் பயத்தால், உம்மை எரிவாய் நிரயத்து வீழ்வர் கொல்லென்று, பரிவதூஉஞ் சான்றோர்கடன்" என்றவாறு நம்மை இகழ்ந்ததற்காக இகழ்ந்த அவர்கள் நரகத்திற்குப் போய்விடுவார்களே என்று வருந்தவேண்டும். "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயஞ் செய்து விடல்" என்ற சத்தியவாக்கை மேற்கொண்டு ஒழுகுதல் வேண்டும். எந்தவிதமான காரணம்பற்றியும் எந்த விடத்தும் யாருக்கும் எதற்கும்பயப்படுதல் மாத்திரம் கூடாது. தைரியமாக திண்மையோடு நம்முடைய காரியங்களைச் செய்துகொண்டு செல்வோமானல், "எண்ணிய எண்ணியாங் கெய்துவர் எண்ணியார் திண்ணியராகப்பெறின்" என்றபடி எண்ணிய காரியத்தைக் கட்டாயம் அடைவோ மென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. ஆனபடியினாலே சகோதரர்கள் ஒவ்வொருவரும் தைரியத்தோடு வேலை செய்ய ஒவ்வொரு துறையிலும் பின் வாங்காது முன்னணியில் நிற்றல்வேண்டும்.

ராய. சோக்கலிங்கம்.
காரைக்குடி.

---

### தனவைசிய ஊழியன்.
### சந்தா விபரம்.

இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு ஆண்டு ஒன்றுக்கு ... ௩—0—0
சிங்கப்பூர் முதலிய வெளி நாடுகளுக்குஆண்டொன்றுக்கு ௫—0—0
தனிப்பிரதி ஒன்றுக்கு ... 0—௧—௬

### விளம்பர விபரம்.

மாதம் ௧-க்குபத்தி-௧-க்கு ... ௨0—0—0
ஷை அரைப்பத்திக்கு... ௧௧—0—0

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்,
காரைக்குடி.

## நமது பலசரக்குக்கடை.

அஞ்சாநெஞ்சன் எழுதுகிறார்:—

பிள்ளை குட்டியில்லாத தனிமையாக இருப்பவர்களுக்குத் தீர்மானங்கள் கொஞ்சம் வருத்தத்தை யுண்டாக்கி விட்டன. சீனிபாக்கு கிராமங்களில் விளையவில்லை. கம்வாய்கால் கூட வெட்டாமல் விளைந்து வந்தால் திருப்திதானே. அப்படித்தான் ஒன்றும் செலவில்லாமல் சீனியும் பாக்கும் பழமும் பணமுங்கிடைத்து வந்தன. இப்போது கிராமம்விளையவில்லை. சாவியாகப் போய்விட்டது. ஊரிலே கலியாணம் புதுமை யென்றால் வீட்டிலே பாக்கும் சீனியும் பழமும் காசும் வரவில்லை. என்ன செய்கிறது? அவ்வளவுதான் கொடுத்து வைத்தது. வருத்தப்படுவதில் பலனில்லை. நிற்க, எனக்கு இப்போது சந்தோஷத்திலே துக்கம் வந்திருக்கிறது. உலகத்திலே சந்தோஷமும் துக்கமும் மாறி மாறித்தான் வரும். என்னசெய்வது? வருவதை யெல்லாம் பார்க்கத்தானே வேணும். ஊரோராகத் தீர்மானம் செய்தார்கள். செலவெல்லாம் அடங்கிப் போய்விட்டது. கல்யாணக்கா[ரர்] வீட்டில் பருப்பும் சோறும் கறி[யும்] பாலும் நெய்யும் விணைகப்பே[...] வில்லை. பழவண்டிக்காரனும் பாக்[...] சீனி மூட்டை வியாபாரியும் பாகவ[...] களும் சமையல் மீசைக்காரர்க[...] ஒரு வாறாக சாந்தமடைந்தார்க[...] சாப்பாட்டுக்குப் போனவர்களும் வ[...] ற்றைத் தடவமாட்டார்களென்று நி[...] த்தேன். நன்றாயிருக்கிறதென்று [...] தோஷம் ஒருபுறம். ஆனால், ஒ[...] சங்கதி. பழைய கருப்பனேகருப்ப[...] என்றமாதிரி அசையாத கல்லுப்பி[...] ளையாராகவேயிருக்கிறது. பலகா[...] பெரிதாக ஜாஸ்தியாகச் செய்யப்ப[...] தென்றால் என்ன நோக்கம். சி[...] தாக வேண்டியதைச் செய்தால் ந[...] மென்று நினைப்பு. அந்த சங்கதிம[...] டும் அளவுகுறைந்ததே தவிர கட[...] யெண்ணை போய் நெய் வரவில்[லை] பெண்களுக்கு கஷ்டமொழிந்தத[...] எல்லாருக்கும் வயிற்றைத் தடவுகி[...] வேலை தொலையவில்லை. முப்பதுக[...] வைக்க வேண்டாம் பத்துக்கறி போ[...] மென்று தீர்மானித்தார்கள். க[...] பத்து வைத்தாலும் கத்தரிப்பழமு[ம்] கீரை கீரைத்தண்டும் தொலையவி[...] லை. கொத்தவரங்காயும் மாங்காயு[ம்] தேடிப்பிடித்துக் கொண்டுவந்துவி[...] கிறார்கள். கறியின் எண்ணிக்கை[...] யைக் குறைத்தால் நல்ல கறிக[...] வரவேண்டும். கையிலே யெடுத்து[...] கொண்டு இலையிலே இழுக்கக்கூட[...] து. வாழைப்பழம் மாம்பழம் பலாப்[...] பழம் தான். அதுவும் இலையிலே[...] தான் போடுவதென்று முழுநீளம் தீ[...] மான மெழுதிவிட்டார்கள். முந்தி[...] கொடுக்கிற காலத்தில் கண்டப[...] கொடுத்தார்கள். இப்போது சமய[...] வாய்த்ததென்று சுருக்குப் போடு[...] கிறார்கள். இலையில்தானே போடுகி[ற] து. முந்தி அழித்ததில் கால் ஒரு[...] பங்கு கூட செலவழியாதே. இலை[...] யில் ஒவ்வொரு மாம்பழம் போட்டா[...] லென்ன? பெண்களும் மனிதர்கள்[...] தானே? அவர்கட்கும் ஏன் போடக்[...] கூடாது? பெருந்தன்மை கிடையா[...] து. இதுதான் எனக்கு மிக துக்[க] மாயிருக்கிறது. பையைத் திறந்து[...] விட்டால் ஒரே அடியாகத் திறந்து[...] விடுகிறது. கட்டினால் படுகட்டாகக் கட்டிவிடுகிறது தெய்வமே! இதெல்லாம் எந்த ஆண்டில் திருந்தப் போகிறதோ? ஆணும் பெண்ணும் ஒரே மாதிரியாக உயர்ந்த ஆகாரத்தைச் சுவிக்கும்படியாக, அரைக்காசும் வீணாகாமல் உண்ணும்படி செய்யக்கூடிய காலம் எப்பொழுது வருமோ?

---

## ஓர் அறிவிப்பு.

நம் சமூக முன்னேற்றங் கருதி விடாது தொடர்பாக வேலை செய்து வரும் ஊழிய சங்கத்தாருக்கு உதவியாக இங்குள்ள நகரத்தார் பலரும், ஊக்கமூண்டாக்கி வருவதோடு பிற தேசங்களுக்குப் பொருள் தேடச் சென்றுள்ளவரும்ஒன்றுகூடி, பெண் தொகையை விலக்கிவிட வேணுமெனத் தீர்மானித்துத் தந்திமூலம் தெரிவித்திருப்பதை யாவருமறிவர். இப்படி சில ஊர் நகரத்தார் செய்து வருவதை பல ஊர்களிலுள்ள மஹாநாட்டுக்கு வரமுடியாத நகரத்தார்கள், ஆங்காங்கு ஒன்றுகூடி பெண் தொகை விஷயமான தங்கள் தங்கள் அபிப்பிராயத்தை தந்திமூலம் அறிவிக்கவேண்டியது அவசியமாகும். இங்குள்ளார் அபிப்பிராயத்தோடு அங்குள்ளார் அபிப்பிராயத்தையும் ஒவ்வொரு ஊரா[ரி]டமுள்ள ஒற்றுமையையும் தெரிவித்துக் கொள்ளுவதற்கு ஏற்ற சமயம்இப்பொழுதேயாகும்.

சு. பழனியப்பா.
கடியாபட்டி.

# மின்சாரரசம்.

இந்த மின்சார ரசத்தின் தேவாமிர்தம் போன்ற குணத்தைக்கண்டு அநேகர் சில போலிரசங்களை தயாரித்து வி
பிரயத்தனம் செய்து வருகிறார்களாகையால் எச்சரிக்கையாய் ஒவ்வொரு பாட்டிலின் பேரிலும் டாக்டர்
பி. வரதராஜுலு நாயுடு அவர்கள் தயார்செய்த "மின்சார ரசம்" என்று ரிஜிஸ்டர் செய்யப்பட்ட
டிரேட் மார்க்கு இருக்கிறதா என்று கவனியுங்கள்.

"மின்சார ரசம்" செய்வதில் உபயோகிக்கப்பட்ட சரக்குகளுக்கு இயற்கையாகவே ஒருவித "மின்சார சக்தியுண்டு."

## மின்சாரத்தின் விசேஷம்.

பாஷாண சம்பந்தமான சரக்குகள் இதில் சேரவில்லை. பத்தியமில்லை. அளவுக்கு மீறி இம்மருந்தை சாப்பிட்டாலும் கெடுதலில்லை. மனிதனுக்கு எத்தனை வியாதிகள்வருமோ அவைகளுக்கெல்லாம் இதை உபயோகிக்கலாம். அன்று பிறந்த குழந்தை முதல் சாகிற கிழவன் வரையில் மின்சார ரசம் உபயோகிக்கலாம் கற்றவரும் கல்லாதவரும், ஏழையும் பணக்காரரும் அதிக பணங்கொடுத்து வைத்தியர்களைத் தேடவேண்டியதில்லை. இம்மருந்து கையிலிருந்தால்போதும். தளர்ந்த நாம்புகளுக்கு முறுக்கேற்றி இரத்தத்தை சுத்திகரித்து, தேகசக்தியையும், புதிய ரத்தத்தையும் உண்டாக்கும். மூளையின் கொதிப்பைத் தணித்து, குளிர்ச்சியையும் ஞாபக சக்தியையும் விருத்தி செய்யும். காலரா, பிளேக், விஷஜுரம் போன்ற தொத்து வியாதிகளுக்கு கைகண்ட மருந்தாயிருப்பதுடன், மின்சார ரசத்தின் வாசனை பட்டமாத்திரத்தில் மேற்கண்ட வியாதிகளை உற்பத்தி பண்ணும் விஷப் பூச்சிகளும் மாண்டு போகின்றன. மேக சம்பந்தமான வியாதிகளில் அடிபட்டு அதனால் நாம்புகள் தளர்ந்து, தேகம் வெளுத்து, அசதி, கை கால் நடுக்கம் அஜீரணம் ஜுரம் முதலிய கொடியரோகங்களை நீக்கி சுத்த ரத்தத்தை உடல்முழுதும் பெருக்கி பசியுண்டாக்கி, தாதுபுஷ்டியையும் ஜீவ சக்தியையும் தரும்.

மின்சார ரசம் ஒரு துளிசாப்பிட்டால் அதன் குணம் உடனே தெரியும். வலியை உடனே நிறுத்தும். தீராத ரோகங்களிலும் அவைகளின் உபத்திரவத்தை தணிக்கும் அரிய குணம் இம்மருந்தொன்றுக்குத்தான் உண்டு. ஒரு முறை இதைவாங்கி உபயோகித்தவர்கள் அடிக்கடி இதை வாங்குகிறார்கள்.

## உபயோகிக்கும் முறை.

### மேல் பூச்சு.

தலைவலி, முடக்கு வாதம், மார்வலி, சூலை, சுளுக்கு, கைகால் பிடிப்பு, இடுப்பு வலி, பல்வலி, காதுவலி, வெட்டுக்காயம், மேகரணம், முதுகுவலி, சகலவித புண்கள், ஊரல், சொரி, சிரங்குபோன்றசகல மேல் வியாதிகளுக்கும் மின்சார ரசத்தை மேலுக்குத்தடவினால் ஆச்சரியமான குணமடையலாம். 15 நிமிஷத்தில் குணம் ஏற்படாவிட்டால், மறுபடியும் வலியுள்ள இடத்தில் மருந்தைத் தடவ வேண்டும்.

### உள்ளுக்குச் சாப்பிடும் முறை.

எந்த வியாதிகளுக்கும் எந்த விதமான பத்தியமும் இல்லை. வியாதிகளுக்கு இஷ்டமான பத்தியம் வைத்துக்கொள்ளலாம். சாதாரண தொந்திரவுகளில் ஒரு துளி மருந்தை சாப்பிட்டாலே மனுஷனுக்கும் தேகத்திறமும் ஆரோக்கியமுண்டாகி விடுகிறது. பித்தம், காமாலை, அஜீரணம், வாயு, இழுப்பு, வாய்நாற்றம், அதிக கோபம், பலஹீனம், பசியேப்பம், தலைசுற்றல், சகல ஜுரங்கள், வயிற்றுப் போக்கு, நுரையீரல், பிதுக்கம், வீக்கம க்ஷயம், சுவாசகாசம், விஷ ஜுரம், பிளேக் ஆகிய கடைசியில் குறிப்பிட்ட நான்கு ரோகங்களுக்கு மின்சார ரசம் போல குணமுண்டாக்கக் கூடிய மருந்து வேறொன்றுமில்லையென்று தைரியமாகக் கூறலாம். கக்குவாய், இருமல், தொண்டைகம்மல், ஹிருதய ரோகம், கிருமிகள், மலச்சிக்கல்; மூலம், பவுத்திரம், மேக ரோகங்கள் ஆகிய சகல ரோகங்களுக்கும் மின்சார ரசம் உபயோகிக்கலாம்.

### மின்சார ரசம்.

அறிக்கை.—சென்ற ஒரு வருஷத்திற்கு ஏஜண்டாக சேலம் R. கிருஷ்ணு & கோ என்ற விலாசதந்தார் இம்மருந்தை விற்று வந்தார்கள். 1921ௗ பிப்ரவரி மீ 7உ முதல் இம்மருந்தை மேற்படி கம்பெனியில் விற்பது நிறுத்தப்பட்டிருக்கிறது. இனிமேல் 'மின்சாரரசம் கம்பெனி' சேலம் என்ற விலாசதாரிடம்தான் மின்சார ரசம் விற்கப்படும். ஆகையால் இனி R. கிருஷ்ணு & கம்பெனியார் ஏதாவது மருந்து விற்றால் அது டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்களின் மருந்தல்ல.

மானேஜர்
மின்சார ரசம் கம்பெனி
சேலம்.

அளவு:—சகல வியாதிகளுக்கும், காலை மாலை இருவேளைகளிலும் சாப்பாடு சாப்பிடுவதற்கு அரைமணி நேரத்திற்கு முன் ஒரு அவுன்ஸ் குளிர்ந்த அல்லது வெந்நீரில் ஒரு துளி மருந்தைவிட்டு சாப்பிடலாம்.

ஐந்து வயதுக்கு குறைந்த குழந்தைகளுக்கு ஒரு சிறு துளி மருந்தை கொடுக்கவேண்டும்.

வாயிலுள்ள பல் முதலிய ரோகங்களுக்கு ஒரு டம்ளர் வெந்நீரில் 4 அல்லது 5 துளி ரசத்தை விட்டு, வாய் கொப்பளிக்கவும் காதுகளில் சீழ்வடிந்தாலும், வலியிருந்தாலும், காலையிலும் மாலையிலும் இரண்டு துளி மருந்தை காதில்விட்டு பஞ்சடைக்கவும்.

ஜன்னிகண்ட கண்களில் கலிக்கம்போடலாம்.

காலரா, பிளேக், விஷ ஜுரம், ஜல தோஷம் முதலிய ரோகங்கள் ஊர்களில் பரவுங்காலத்தில் மின்சார ரசத்தை கைக்குட்டைகளில் சிறு துளிகள் போட்டு அடிக்கடி முகரலாம். அல்லது ஒரு சிறு துணியை மருந்தில் நனைத்து வீடுகளில் எறிக்கலாம்.

### மின்சார ரசம்.

| | | |
|---|---|---|
| புட்டியின் விலை | ரூ. | 2—0 |
| தபால் செலவு | ,, | 0—5 |

பினங்கு, சிங்கப்பூர் மலாக்கா முதலிய இடங்களுக்கு தபால் செலவு 1-பு முதல் 12 புட்டிவரையிலும் ரூ. 1—0

சிலபிரமுகர்களின் அபிப்பிராயங்க

### சகல வியாதிகள்.

55, 30 தெரு ரங்கூன் 19—3—20

ஐயா,

தங்கள் கம்பெனியிலிருந்து வரவ கனம் பி. வரதராஜுலு நாயுடு அவர்கள மின்சாரரசத்தைப்பற்றி இரங்கூனில் டா தவர்கள் ஒருவருமே இல்லை. கூ மட்டும் அநேக வியாதிகளை சீக்கிரத் குணப்படுத்துகிறது. தவிர யாதொரு மான பத்தியங்களில்லாமல் வியாதிக சௌக்கியப் படுத்துகிற இம்மருந் கண்டுபிடித்த மகான் அவர்களுக்கு மனப்பூர்வமான நன்றியறிதலை மிகு வந்தனத்துடன் இதன் மூலம் தெரி கிறேன். இதுகண்டவுடன் கனம் நா அவர்கள் மின்சார ரசம் பாட்டல் 25 பி. யில் அனுப்பும்படி கோருகிறேன்.

M. K. M. முகம்மது சுல்தா

### மேகரோகம்.

இரண்டு வருஷங்களாக நான் கஷ்ட பட்டுக் கொண்டிருந்த மேகரோகங்கள் தினங்களில் மின்சார ரசத்தினால் சௌ கியமாய் விட்டன. பத்தியம் ஒன்று மில்லை.

பொள்ளாச்சி, வேலனு சா

### பிளேக்.

கட்டியுடன் எனக்கு பிளேக் கண் வெகு அபாயகரமான நிலையிலிருந்தே மின்சார ரசத்தை உபயோகப்படுத்தி தினால் நான் பிழைத்தேன். மின்சார மேலுக்குத் தடவி ஆப்ரேஷன் செய்யா லேயே பிளேக்கட்டியை சௌக்கியப்ப டுத்திக் கொண்டேன்.

அ. ர. அண்டு கோ., காதர்மைதீன்
ஷிமுக்கா மைசூர். ராவுத்தர்.

### ஸ்திரீரோகம்.

ஐயா, எனது மனைவி 20 வருஷ கா மாய் கர்ப்பம் தரிக்காமல் ஸ்திரீ ரோக ளினால் மிகவும் கஷ்டப்பட்டுக் கொ டிருந்தாள். இப்பொழுது தங்களுடை மின்சார ரசத்தை உபயோகப் படுத்தி தால் மேற்சொன்ன ரோகங்களெல்லா நிவர்த்தியாய் 4 மாதம் கர்ப்பமாய் இரு கிறது.

நாமக்கல் 9—5—

K. S. A. செட்டிய

### சூதக ஜன்னி.

என் மனைவிக்கு சூதக ஜன்னி ஏற்ப டது. உள்ளூர் வைத்தியர்கள் கைவி டார்கள். ஆனால், டாக்டர் வரதராஜு நாயுடுவின் மின்சார ரசத்தினால் அவ மரணத்திலிருந்து தப்பிவிட்டாள். ஆச்ச யம்.

அர்த்தனாரி முதலியா
திருச்செங்கோ

கைகண்ட மருந்து. ஒரே முறை பரீக்ஷியுங்கள். கியாட்லாக் இனாம்.

**மானேஜர். மின்சார ரசம் கம்பெனி**

தந்தி விலாசம்:—"ரசம் கோ.,— "RASAM Co" சேலம்.

சொ. முருகப்பசெட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில்
அச்சியற்றிப் பிரசுரஞ் செய்யப்பெற்றது.

